# நகரக் கோவில்களின்

# சிறப்பு மலர்



நான் இருக்கும் இடத்தில்
சகல செல்வங்களும்
கற்பக விருட்சமாக வளரும்

புண்ணியம் கோடிவரும் பொய்வாழ்க்கை ஓடிவிடும்
எண்ணியது கைகூடும் ஏற்றதுணை — நண்ணிடவே
வாழ்வில் வளர்ஒளியாம் வள்ளல் விநாயகனை
நாளெல்லாம் வாழ்த்திடுவோம் நன்று.

— பெருந்தேவனார்

முருகனே! செந்தி முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன்மகனே! — ஒருகைமுகன்
தம்பியே நின்உடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான்,

— நக்கீரர்

இல்லக விளக்கது இருள் கெடுப்பது
சொல்லக விளக்கது சோதி உள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே.

— அப்பர்

சீதமழை, முகில் பொழிக! தேசமெலாம்
பயிர்விளைக! செல்வம் ஓங்க!
மாதர்குழாம் மக்கள் குழாம் மனைஅறங்கள்
உடன் பொலிந்து மலிந்து வாழ்க!
மேதகுசீர்ச் சைவநெறி வேதநெறி
தழைத்து ஓங்க! மேலும் மேலும்
பூதலமேல் சிவபெருமான் ஆலயங்கள்
பூசனைகள் பொலிக மாதோ!

— திரிகூட ராசப்பக் கவிராயர்

# நகரக் கோவில்களின்

# சிறப்பு மலர்

காரைக்குடி முத்துப்பட்டணம் நகரத்தார்கள்
11—12—88 அன்று ஒன்பது நகரக் கோவில்களுக்கும்
மெ. இராமநாதன் ஏற்பாட்டில் பேருந்துமூலம்
சென்று வழிபட்டு வந்தபொழுது
வெளியிடப்பெற்றது.



தொகுப்பு & வெளியீடு:

**மெ. இராமநாதன்,**
"மெய்யர் விலாஸ்"
60, இரண்டாவது வீதி,
முத்துப்பட்டணம்,
காரைக்குடி - 623 001.

உ
சிவமயம்

ஒன்பது நகரத் திருக்கோவிலுக்குச் சென்று வரும் நகரத்தார் பெருமக்களுக்கு எங்கள் உளம்கனிந்த நல்வாழ்த்துக்கள்



இவண்,

மெ. மெ. சி. சேவு. குடும்பத்தார்.

உ

சிவமயம்

ஸ்ரீ மீனாட்சி அம்மன் துணை

# முன்னுரை

காரைக்குடி முத்துப்பட்டணம் நகரத்தார் மீனாட்சி அம்மன் திருக்கோவில் காரியங்களில் நான் ஆர்வமாக ஈடுபட்ட பொழுது, ஆச்சிமார் பலர் ஒன்பது நகரக் கோவில்களுக்கும் சென்று வழிபட ஏற்பாடு செய்யும்படி என்னிடத்தில் ஆர்வமாகக் கேட்டுக்கொண்டனர். அந்த முறையில் ஒன்பது நகரக் கோவில்களுக்கும் நகரத்தார்களுடன் பேருந்தில் சென்று வழிபடவும், இந்த நூலை வெளியிடவும் திருவருள் வாய்த்தது. அன்பர்கள் திரு **நா. நாராயணன்** (பேரா) திரு. **ந ப. இராமசாமி** ஆகியோர் 7—10—88 அன்று வெளியிட்டுள்ள "நகரக் கோவில்களின் சிறப்பு மலர்" என்ற நூலை மையமாக வைத்து இதனை வெளியிடுகிறேன். அவர்களுக்கும் என் நன்றி உரியது.

இந்நூல் வெளிவர உதவியாக இருந்த நகரத்தார்களுக்கும், வாழ்த்துரை வழங்கிய நகரத்தார் குருபீடமான பாதரக்குடி ஆதீனகர்த்தர் **சுவாமி ரவீந்திரர்**, பெண்கள் குருபீடமான துலாவூர் ஆதினகர்த்தர் **ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகர்**, கோவிலூர் ஆதினம் **ஸ்ரீ காசிவிஸ்வநாத ஞான தேசிகர்** ஆகியோருக்கும், ஆசியுரை வழங்கிய திரு. **அரு. சோமசுந்தரம்** அவர்களுக்கும், சுவாமி, அம்மன் பாடல்கள் எழுதிய காப்பியக் கவிஞர் திரு. **நா. மீனவன்** அவர்களுக்கும் என் நன்றி உரியது.

இப்புத்தகத்தைச் சிறப்பான முறையில் அச்சிட்டுத் தந்த வள்ளுவர் அச்சகம் உரிமையாளர் திரு. **வீர. முருகப்பன்** அவர்களுக்கும் என் நன்றி உரியது.

அன்புள்ள,

**மெ. இராமநாதன்.**

# ஆசியுரை

அடியேன் புதுவயலில் பிறந்து, தேவகோட்டைக்குச் சுவீகாரம் சென்று வளர்ந்து, சண்முகநாதபுரத்தில் (ஆருவயலில்) தலைமை ஆசிரியராகப் பணிபுரிந்து 1967 ஜுன் 22-ஆம் தேதி முதல் காரைக்குடி முத்துப்பட்டணத்தில் வாழ்ந்து பணிபல புரிந்து வருகிறேன். முத்துப்பட்டணம் நகரத்தார் மீனாட்சி அம்மன் திருக்கோவில் காரியங்களில் திரு. **மெ. இராமநாதன்** மிகவும் ஈடுபாட்டுடன் இயங்கியது என்னைப் பெரிதும் ஈர்த்தது. இளைஞராய் இருந்தும் பக்தி சிரத்தையுடன் அவர் கோயிற் பணிகளை ஆற்றியது கண்டு ஒவ்வொருமுறையும் பாராட்டி உள்ளேன். அவர் என்னை தந்தை ஸ்தானத்தில் வைத்து மதிக்கிறார். நானும் அவரை மைந்தன் ஸ்தானத்தில் வைத்துப் போற்றுகிறேன். இது இறையருளால் ஏற்பட்ட தொடர்பு. இவர் ஒன்பது நகரக் கோவில்களுக்கும் அன்பர்களோடு சென்று வழிபடுவதும், இந்த நூலை வெளியிடுவதும் புண்ணிய காரியமாகும். இதற்காக இவரைப் பெரிதும் பாராட்டி, இவரது முயற்சிகள் சிறக்க ஆசி கூறுகிறேன். இவருக்கும், இவரது மனைவி, மக்கட்கும் என் நல்லாசிகள்! கோவில் வழிபாடு செய்யும் அனைவர்க்கும் என் தாழ்மையான வணக்கம் உரியது.

அன்புள்ள,

**அரு. சோமசுந்தரன்.**

27—11—1998

உ

ஸ்ரீ பழம்பதிநாதர் துணை

# வாழ்த்துரை

கலாமடம் பாதரக்குடி ஆதீனம் நகரத்தார் குருபீடம்
- பாண்டியநாட்டு முதன்மையார் ஈசான
சிவாச்சாரியார் ஆகிய ஸ்ரீலஸ்ரீ ரவீந்திரர் என்ற
காமாட்சிசுந்தர தேசிக சுவாமிகள் M. A.,
பாதரக்குடி அஞ்சல்-623 307. மானகிரி வழி

*முகாம்: பாதரக்குடி.* *நாள்: 30—11—88*

அன்புள்ள மெ இராமநாதன் அவர்களுக்கு நல்லாசிகள். இப்பவும் தாங்கள் காரைக்குடி முத்துப்பட்டணம் நகரத்தார்கள் நகரக் கோவில் ஒன்பதுக்கும் சென்று தரிசனம் செய்ய ஏற்பாடு செய்திருப்பது அறிந்து பெரிதும் மகிழ்ச்சியுற்றோம்.

நகரத்தார்கள், வரலாறு தோன்றிய காலத்திலிருந்தே சென்ற இடமெல்லாம் சிவப்பணிகள் செய்து புகழ்பெற்றவர்கள் நகரத்தார்கள் இறைவன் குடிகொண்டுள்ள கோயிலின் பெயரால் தமது வமிசத்தை அமைத்துக்கொண்டிருப்பது வேறு எந்த இனத்துக்கும் இல்லாத சிறப்பாகும்.

இவ்வாறு நகரத்தார் இனத்துக்கும் சிவ தருமத்துக்கும் சான்ருக விளங்கும் நகரக் கோயில்களுக்கு நீங்கள் யாத்திரை செல்வதும் நகரத்தார் வரலாறு அடங்கிய நூல் வெளியிடுவதும் வருங்காலசந்ததியினர் தமது குலப்பெருமையையும் கலாச்சார மரபுகளையும் அறிய மிகவும் உதவியாக இருப்பதுடன் பெரும் சிவ புண்ணியமுமாகும்.

தங்கள் யாத்திரை செவ்வனே நிறைவேற
நல்வாழ்த்துக்கள்.

ஸ்ரீ மீனுட்சி பழம்பதிநாதர் துணை.

சிவமயம்

# வாழ்த்துரை

துலாவூர் ஆதீனம் — துலாவூர்
திருப்பெருந்திரு நிரம்ப அழகிய தேசிகராகிய
ஞானப்பிரகாச சுவாமிகள்
மடாதிபதி — நகரத்தார் பெண்கள் குரு

காரைக்குடி முத்துப்பட்டணம் நகரத்தார்கள், ஒன்பது நகரக் கோவில்களுக்கும் 11—12—1988 அன்று **மெ. இராமநாதன் செட்டியார்** அவர்களின் ஏற்பாட்டில் பேருந்து மூலம் சென்று வழிபட்டு வரும் செய்தி அறிந்து மிக்க மகிழ்ச்சி, தங்களின் சிவ தரிசனம் இனிது நிறைவேற ஸ்ரீ மங்களாம்பிகை சமேத வாஞ்சீஸ்வரப்பெருமான் திருவருளையும், சற்குரு ஸ்ரீ நிரப்ப அழகிய தேசிக சுவாமிகள் குருவருளையும் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

சைவசமயிகளாகவும், சிவநேசச் செல்வர்களாகவும் விளங்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், தமது வழிபடு மூர்த்தியாகிய சிவபெருமானுக்கு நகரக் கோவில்கள் ஒன்பதும், ஏழு வகை நகரத்தார்களால் அமைத்து நிர்வகித்து வருவதும், சிவ தரிசன வழிபாட்டை எடுத்துக்காட்டுவனவாக அமைந்திருக்கிறது மேலும், இக வாழ்க்கைக்காக வாணிபத் தொழில் செய்வதுபோல பர வாழ்க்கைக்காக இறை பணிக்குத் தம் பொன்னையும், பொருளையும் வழங்கித் திருப்பணி செய்வதையும் ஒரு தொழிலாகக் கொண்டு செயல்பட்டு வரும் நகரத்தார்கள் எல்லா நலன்களும் நிரம்பப் பெற்று மேன் மேலும் சிறந்தோங்க வாழ்த்துகின்றோம்.

இங்ஙனம்,
ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகராகிய
ஞானப்பிரகாச தேசிகர்
29—11—88

உ
சிவமயம்

# வாழ்த்துரை

ஸ்ரீலஸ்ரீ காசிவிசுவநாத ஞானதேசிகர்
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்-623 319.
மானகிரி வழி,
ப. மு. மாவட்டம்.

தொலைபேசி காரைக்குடி } 2646

காரைக்குடி முத்துப்பட்டணம் நகரத்தார்கள் ஒன்பது நகரக் கோவில்களுக்கும் நலமே சென்று அம்மையப்பனின் திருவருளைப்பெற்று நல்ல தேக சௌக்கியத்துடன் சகல நலன்களையும்பெற்று எம்மை ஆட்கொண்ட கொற்றவாளீஸ்வரர் திருநெல்லை அம்மையின் திருவருளால் வாழ்வாங்கு வாழ வாழ்த்துகிறோம்.

காசிவிஸ்வநாத ஞானதேசிகர்.

# சாதிமுறை நியாயங்கள்

1. மாதா, பிதா, குரு, தெய்வம், குலதேவதை இவர்களை வணங்குதல்.
2. கோவில்களுக்கும், குருஸ்தானங்களுக்கும் உள்ள சொத்தைப் பராமரித்து அதில் வரும் ஊதியத்தை அதே தர்மங்களுக்குப் பயன்படுத்துதல்.
3. ஆண்கள் பாதரக்குடி மடத்திலும், பெண்கள் துலாவூர் மடத்திலும் உபதேசம் கேட்டுக்கொள்ளுதல்.
4. சிவமதத்திலேயே இருத்தல்.
5. தத்தம் கோவில் மாலை பெற்றே திருமணம் செய்விப்பது.
6. ஒரே கோவில் பிரிவில் திருமணம் செய்து கொள்ளாமல் இருத்தல்.
7. சுய கோவில் பிரிவில் சுவிகாரம் செய்து கொள்ளுதல்.
8. இரணியூரும் பிள்ளையார்பட்டியும் சகோதரர்களானதால் இவர்கள் தம்முள் திருமணம் செய்யாதிருத்தல்.
9. ஜீவ வதை வியாபாரம், குதிரை வியாபாரம், வெற்றிலை போன்ற அழுகல் சரக்கு வியாபாரம் செய்யாதிருத்தல்.
10. பணம் கொடுக்கல் வாங்கலில் தர்ம வட்டி வாங்குதல்.
11. திருட்டு வியாபாரம் செய்வதில்லை. பிறன் மனைவி சேர்வதில்லை. தாசிகளிடம் கொடுக்கல் வாங்கல் செய்வதில்லை.
12. நகரமுறை தவறியவர்களையும், ராஜ தண்டனை பெற்றவர்களையும், சோரம் செய்தவர்களையும் சேர்வதில்லை.
13. செட்டிநாட்டிலேயே குடியிருப்பது. விசேடங்கள்செய்வது.
14. பெண்கள் தீர்த்த யாத்திரைகளுக்கு புருஷர்களுடன் போய்வர வேண்டும்.
15. எந்த விஷயத்திலும் முன் வழக்கப்படி நடந்துகொள்வது.
16. நகரக்கூட்டம் கோவில் வாசல் அல்லது மடத்தில் நடத்துவது.

# நகரத்தார் சரித்திரம்

## (பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரம்)

காவிரித்தாய் முன்பு கலந்ததொரு பூமியிலே
பூவிரித்து நலல புகழ்விரித்து வாழ்ந்தவர் நாம்

சோழன்தான் அன்று தோழனென வாழாமல்
காலனென வாழ்ந்த காரணத்தால் புறப்பட்டோம்.

பட்டினத்தை விட்டுப் பாண்டியனைச் சரணடைந்தோம்.
பட்டினத்தை ஆனால் இன்றுவரை மறக்கவிலை:

பட்டினத்தில் வாழ்வோர் பலலட்சம் ஆனாலும்
பட்டினத்தார் என்ற பாராட்டோ ஒருவர்க்கே!

பட்டினத்தில் வந்து பக்தியினைப் பரப்புகிறோம்.
இட்டிலியும் சோறும் விலையேறிப் போனாலும்

பொறுமையுடன் சோறு போட்டிங்கே தமிழ்பரப்பும்
அருமைமிகு நிர்வாகி அனைவர்க்கும் வணக்கங்கள்!

பூவிரியும் காடு; புனல்விரியும் மாயூரம்;
காவிரியும் ஆழி; கலம்விரியும் பட்டினத்தில்

பாவிரியும்; பக்திப் படைவிரியும்; இறைவணங்கின்
சர(வு)இரியும்; தீமைச் சனிஇரியும் பூம்புகார்!

ஓரா யிரம்பொன்னை ஒருபாட்டுக் களித்ததலம்!
பாராண்ட சோழப் பார்த்திபர்கள் வாழ்ந்ததலம்!

"கரிகால"னோடு "கண்ணகி"யும அன்று
பயிரான பூமி! பக்திக்குப் பழம்பூமி!!

கடல்கடந்த குதிரை காவிரிப்பூம் பட்டினத்தில்
இடங்களெலாம் பரவி இருந்ததுவும் அக்காலம்!

வண்டியெலாம் மிளகு; வடமலையின் தங்கமணி,
மண்டியதும் மேற்கு மாமலையின் அகிலாரம,

தென்கடலின் முத்து, கீழ்கடலின் செம்பவளம்,
தன்னிகரில் கங்கைத் தனியுடைமைப் பொருள்களுடன்

பொன்னியதன் செல்வம், புகழிலங்கை உண்பொருளும்
அன்னியமாம் பர்மா ஆக்கியதோர் பொருள்களெலாம்

நீரோடும் இந்த நிலத்தோடு மண்டியதால்
சீரோடும் பூமி சிறதளவு நெரிந்ததுவாம் !

மன்னன் மிக வாழ்ந்த மணமிக்க இந்நிலத்தில்
"மன்னர் பின்னர்" எனும் மாண்புமிகு நகரத்தார்

வாழ்ந்து பலகாலம் வாணிபங்கள் செய்தனரே !
ஆழ்ந்து பலதர்மம் அயராது காத்தனரே !

நாக நாட்டினிலே வாழ்ந்த நகரத்தாரைத்
தாகமுடன் இந்தத் தரணியிலே வரவேற்றுச்

சோழப் பெருவேந்தர் காவிரிப்பூம் பட்டினத்தில்
வாழ ஒருமூன்று வீதியினை வகுத்தளித்து

மாட மாளிகையும் மாண்புடைய ஆலயமும்
கூட கோபுரமும் கோயில்போல் வீடுகளும்

சிங்கக் கொடிகலசப் முடிபுனையும் சீர்வரிசை
வங்கக் கடல்கடந்து வாணிபச்செய் நல்லுரிமை

அத்தனையும் ஈந்தே ஆதரித்த காரணத்தால்
எத்தனைநூ றாண்டாய் இங்கிருந்தார் நகரத்தார் ?

தூர்த்தனொரு சோழன் நகரப்பெண் நாடியதால்
ஆர்த்தெழுந்த பெண்டிர் ஆடவர்கள் தீக்குளித்தார்.

சின்னஞ் சீறிளைஞர் சிலநூறு வாழ்ந்தவர்கள்
பின்னர் வேளாள குடியினிலே பெண்ணெடுத்தார்.

மீண்டும் தழைத்தோங்கி மேலான குடியாகி
ஆண்டாண்டு காலம் அருஞ்செல்வத் துடன்வாழ்ந்தார்!

கோடானு கோடி கொழித்ததனால் நகரத்தார்
வாடாத சோழ மண்டலத்தின் வலக்கரமே;

சோற்றால் மடையடைத்த சோணாட்டில் தங்கபெனும்
ஆற்றை அணைகட்டித் தேக்கியவர் நகரத்தார்!

ஐந்து நாயன்மார் அமர்நீதி, இயற்பகையார்,
நைந்த காரைக்கால் அம்மையுடன், கலிக்கம்பர்

மூர்த்தி நாயன்மார் முளைத்ததுவும் இக்குலமே!
சாத்தன் இளங்கோவும் புகழ்ந்ததுவும் இக்குலமே!

வள்ளுவனைக் காத்து வண்டமிழுக் குரமிட்ட
வள்ளலெனும் ஏலேல சிங்கனுமே இக்குலமே!

பட்டினத்தா ரோடு பாடுவார் முத்தப்பர்
வட்டியுடன் தந்த வண்டமிழ்ப்பா ஆயிரமே!

தாலாட்டுப் பாடித் தமிழ்வளர்த்த ஆச்சியரில்
பாராட்டும் ஒக்கூர் மாசாத்தி இக்குலமே!

கவிமணியும், நல்ல பாரதியும், நாமக்கல்
தவமுனியும், யோகிசுத் தானந்த பாரதியும்,

சேதுப் பிள்ளையுடன், சீனிவாச சாஸ்திரியும்
ஓதும் புகழ்மாலை சூட்டியதும் இக்குலமே!

ஈரா யிரமாண்டு முன்னரிப் பட்டினத்தில்
எண்ணா யிரம்புள்ளி நகரத்தார் இருந்தார்கள்.

ஆழி கடந்தார்; அருங்கலங்கள் நூறேறி
ஊழி பெயர்ந்தும், உளம்பெயரா உறுதியுடன்

நாடு பலகடந்து நவரத் தினமீட்டி
வீடு கொணர்ந்து விரிபுகழைப் பெற்றார்கள்.

பெண்டு மறந்து பிள்ளைகளைத் தான்மறந்து
உண்டி மறந்தே உறக்கமுடன் சுகமறந்து

காலும் கலமாகிக் கடலோடு வாழ்ந்ததனால்
பாலும் பழச்சாறும் ஓடியது பட்டினத்தில்

வெள்ளியுடன் தங்கம் விளையாடும் பாத்திரங்கள் !
பிள்ளையெலாம் தாயம் உருட்டுவதும் ரத்தினங்கள் !

கண்வளரப் பாட்டு; காரிகையர் தாலாட்டு;
பின் அழுகைப் பாட்டு; பிணத்துக்கும் ஒப்பாரி !

பேசுவதும் பாட்டு, பெண்டிரெலாம் இவ்வினத்தில்
ஏசுவதும் சிலேடை; ஏத்துவதும் பாமாலை !

இம்மியிலே சேர்த்த செல்வமெலாம் சடங்குகளாம்
அம்மியிலே வைத்தே அரைப்பதுவும் இக்குலமே !

கோடானு கோடி கோயிலுக்குத் தம்பொருளை
வாடாமல் ஈந்த வள்ளலினம் இவ்வினமே !

நல்ல நகரத்தார் நற்பெருமை கேட்டதனால்
வல்ல பாண்டியர்கள் வரவழைத்தார் இக்குலத்தை

சோழப் பேரரசன் சொல்லியதால் நகரத்தார்
வாழப் பாண்டியர்கள் வளமண்ணில் கால் வைத்தார்.

ஏழாம் நூற்றாண்டில் இணையில்சௌந் தரபாண்டி
மேலாம் திருமன்னன் மிகவேண்டி அழைத்ததனால்

எண்ணா யிரம்புள்ளி எழுந்தருள அனைவர்க்கும்
கண்ணான பாண்டிக் காவலனோ பலஉரிமை

செப்புப் பட்டயத்தில் சேர்த்தெழுதித் தந்திட்டான்.
ஒப்பில் நகரத்தார் ஓங்காரக் குடியேறி

வாழத் தொடங்கியது வளர்காரைக் குடியதுவே !
வேலங் குடியோடு, இளையாற்றங் குடிமாத்தூர்.

பிள்ளையார் பட்டி, பெருஞ்சீர்வை ரவன்கோயில்.
சொல்லரிய மேலோர் புகழ் சூரக் குடியுடனே

இரணியூர்க் கோயில் இலுப்பைக் குடிக்கோயில்
திறமுடையார் கண்டு தேர்ந்தார்ஒன் பதுகோயில் !

விரிகடலோகிழக்கு; வெள்ளாற்றங் கரைவடக்கு
பிரான்மலையோ மேற்கு; பெருவைகை தான்தெற்கு !

நால்எல்லை கொண்ட நன்னிலத்தில் நகரத்தார்
சால்புடனே வாழ்ந்த சரித்திரத்தைச் சொல்கின்றேன்.

தொண்டாற்றி அன்று தொண்ணூற்றா றூர்களிலே
பண்டுள்ள நாடு நகர்போற்ற வாழ்ந்தார்கள் !

வேட்டைக்கு வந்த பாண்டியனோர் சிறுமியினைப்
பாட்டையிலே கண்டு பசி எடுத்துப் போனதனால்

எல்லோரும் சென்றே இகல்வேந்தன் முன்னின்று
' கல்லாத சிறுமி தனைவிடுக'' என்றார்கள்

"' உங்கள் பெண்ணென்றே உணராமல் தூக்கிவந்தேன்;
தங்களிடம் தந்தால் தலைகொய்வீர் என்கின்றார்.

என்பிழையை நீங்கள் எல்லோரும் பொறுத்திவளை
மன்பதையில் வாழ வழிசெய்வீர்; கொன்றீரேல்

ஒருதலைக்கோர் எட்டுத் தலைகொய்வேன்; அபராதம்
உறுதியுடன் எண்ணா யிரம்பொன்னை வாங்கிடுவேன் ''

என்றுரைத்த மன்னன் கட்டளைக்(கு) இணங்கியவர்
மன்றினிலே பெற்ற மகளோடு வந்தார்கள்.

கற்பென்னும் திண்மை கைக்கொண்ட கொள்கையினால்
பொற்புடைய பெண்ணைப் பொழுதுக்குள் கொன்றார்கள்

ஏழு கோயிலென இருந்தவர்கள் ஒவ்வொன்றாய்
ஏழு தலைதந்தார்; இன்னொன்றை யார் தருவார் ?

என்றெண்ணிச் சான்றோர் ஏங்குகையில் ஒக்கூரார்
மன்றினிலே சொன்னார் "மறுதலையும் நாம் தருவோம்"

என்றுரைத்த வீரர் என்பதனால் இன்றுவரை
மன்றிலெலாம் முன்னர் மரியாதை ஒக்கூர்க்கே!

எட்டுப் பெருவீரர் இணையில்லாப் பாண்டியன் முன்
வெட்டுப் படவந்தார்; பாண்டியனோ மிகவருந்தி

"வந்த பழிபோதும்! வல்லவர்காள்! செல்க!" எனச்
சிந்தை வருந்திச் செப்பியபின் மீண்டார்கள்.

அன்றுமுதல் செட்டி நாட்டினிலே கொடி கட்டி
இன்றுவரை வாழும் இயல்புடையார் ஆனார்கள்.

சிங்கக் கொடிகட்டிச் சேர்த்திழுக்கக் கயிறாகத்
தங்கக் கொடிகட்டித் தலை நிமிர்ந்து வாழ்ந்தார்கள்.

ஆன்ற பெருஞ்செல்வம் அத்தனையும் இவர்க்கடக்கம்!
ஈன்ற குழந்தை எனும் செல்வம் தான் மிகக்குறைவு!

கால ஓட்டத்தில் கருத்துக்கள் மாறுகையில்
சில நகரத்தார் சிறிதளவும் மாறாமல்

வாழ்ந்து வந்ததனால் வளம் குன்றிப் போனார்கள்.
தாழ்ந்த நிலையினிலே தலைநிமிர முயல்கின்றார்.

நாடெல்லாம் காத்த நகரத்தார் இன்றைக்கு
வீடெல்லாம் காக்க வழியின்றி வெதும்புகிறார்.

குடும்பத்தில் பெண்கள் குலவிளக்காய் இருப்பதனால்
குடும்பத்தில் பெண்கள் குலச்சிறையை விடுவிப்போம்.

*

# அம்மையப்பர் உதவும் முறை

- பொற்கிழிக் கவிஞர் அரு. சோமசுந்தரம்

வானில் ஓர் நாள் வருகின்றான் பரமசிவன்
தூணில் இருந்தான் தோள் கொடுக்க வருகின்றான்
அன்னை உமையவளும் அவனருகே வருகின்றாள்
முன்னை அறிவோ நூலறிவோ இல்லாத
மூடன் ஒருவன் நுனிக்கொப்பில் தானிருந்து
கோடரியால் வெட்டத் தொடங்குகிறான் அடிக்கிளையை !
வெட்டும் கிளையாட வெட்டுபவன் தானாட
எட்டும் அறிவில்லான் இன்னுமதை வெட்டுகிறான்
பார்த்தாள் இறைவியவள்; பாவமகன் தனைக்கண்டு
வேர்த்தாள்; மூடனையும் காக்கவென வேண்டுகிறாள்
" நாதா ! மூடனையும் நடிக்காமல் காத்திடுக "
"பேதாய் ! இவனையுமா பேணவெனக் கேட்கின்றாய் ?
சற்றும் அறிவில்லான்; என்றாலும் இவனையுமே
முற்றும் காத்திடவே முயன்றிடுவோம; ஆனாலும்
சும்மா வீழாமல் சுயமுயற்சி செய்யட்டும்.
அம்மா எனவீழ்ந்தால் அன்னைநீ காத்திடுக !
அப்பா எனவீழ்ந்தால் அடியேன் காக்கின்றேன்
தப்பாய் இருந்தால் தலைவிதிபோல் நடக்கட்டும் "
என்றான் இறைவன்; இறைவியவள் " சரி " என்றாள்
சென்றாள் அருகில்; சிந்தையிலா மூடன் அவன்
கிளையை வெட்டிக் கீழ்விழுந்த வேளையிலே
குலைநடுங்கும் அன்னை கூப்பிடுவான் என்றிருந்தாள்
" ஐயோ " என வீழ்ந்தான்; அடிபட்டுச் செத்தானே !
ஐயோ ! இன்றைக்கும் அக்கதைதான் தொடருதடா !
பிள்ளைகளோ இங்கே பெற்றோர்க்குச் சுமையின்றி
வல்லவராய் வாழச் சுயமுயற்சி செயவேண்டும்.

# குலப்பெருமை

* ஈசனுக்கு அம்மையும் அப்பனையும் தந்த குலம் நகரத்தார் குலம்! நம் குலத்துதித்த காரைக்காலம்மையை சிவபெருமான் 'அம்மையே' என்றழைத்தார். நம் பட்டினத்தாருக்குச் சிவபெருமானே குழந்தையாக வந்து மருதவாணன் என்ற பெயரில் வளர்ந்து அவரை 'அப்பா' என்றழைத்தார்.

* மன்னர்களுக்குத் தலைநகரில் கோட்டை இருந்ததுபோல் அவ்வரசர்கள் ஆட்சிக்கு உட்பட்ட நாட்டில் கோட்டைகள் போல் வீடு கட்டிக்கொண்டு வாழ்ந்ததால் 'நாட்டுக் கோட்டையார்' என்றழைக்கப்பட்டார்கள்.

* காஞ்சி நகரத்திலிருந்தும் புகார் நகரத்திலிருந்தும் வந்தவரென்பதால் 'நகரத்தார்' எனப்படுகிறோம்.

* ஐயாயிரமாண்டுச் சரித்திரப் பெருமையோடு இதுவரை யாரும் மதம் மாருத குலம்.

* பர்மாவின் அபிவிருத்திக்குச் செட்டியார்களே காரணம்.

* முன்பு ஏழைகளே இல்லாத ஒரே இந்திய சமூகம். தொழில் இல்லாத செட்டியாரே இல்லை.

- மலேயா சுல்த்தான், தஞ்சை சரபோஜி, புதுக்கோட்டை ராஜா போன்ற மன்னர்களுக்கே பண உதவி செய்த சமூகம்.

- மன்னர்களுக்கு அடுத்தபடியாக அதிகத்திருப்பணிகள் செய்தவர்கள்.

- அனைத்து நகரத்தார்களும் ஏதோ ஒரு கோவில் திருப்பணி யில் சம்பந்தப்பட்டவர்களே.

- இந்தியாவில் வங்கித்தொழிலின் முன்னோடிகள். ஃபாரின் எக்சேஞ் முறையை அறிமுகப்படுத்தியவர்கள்.

- இந்தியாவிலேயே கல்விக்காக அதிகம்வாரி வழங்கிய சமூகம்.

- மூவேந்தரோடு ஒப்பிடும் அளவு தமிழிசைக்குத் தொண்டு செய்தவர்கள்.

- நாயன்மார் 63 பேரில் ஐவர் நகரத்தார் (இயற்பகை நாயனார், அமர் நீதிநாயனார், மூர்த்திநாயனார், கலிப்பகை நாயனார், காரைக்கால் அம்மையார்)

- ஐம்பெரும் காப்பியத்தில் மூன்று நகரத்தார் பற்றியது (சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி)

# நீ அறிவாய் தமிழர் நிலமே!

— கவிஞர் கண்ணதாசன்

சிந்துவெளிப் புகழ்காத்து சீர்காத்து திறம்காத்து
தென்னாடுவந்த குலமே

திருவுடைய சோழனவன் செம்மாண் புகார் நகரில்
திருக்கோவில் கொண்ட குலமே

வந்தவழி மறவாது வாய்மை நெறி தவறாது வாழ்வாங்கு
வாழ்ந்த குலமே

வாணிபமும் மதநெறியும் வளர்ந்தோங்கி நாள்தோறும்
வளமாக நின்ற குலமே

எந்தமிழர் நாடெங்கும் இறைபணியே பெரிதென்று
எந்நாளும் செய்த குலமே

என்னுடைய குலமென்பேன் எல்லாமும் நீயறிவாய் ஏற்றுக்
கொள் தமிழர் நிலமே!

காவிரியின் பெருமாட்டி கவின் மதுரை நகர்தன்னைக்
கனல்சூழ வைத்த கதையும்

கண்ணகி என்றால் இந்த மண்ணெல்லாம் அடிபணியக்
கற்போடு வாழ்ந்த நிலையும்

நாவசையும் போதெல்லாம் நாடசையும்படி நின்ற நல்
வளையாபதியின் கதையும்

நாடியவர் பணியாது மணிமேகலை என்ற நன் மங்கை
வாழ்ந்த கதையும்

காவியங்கள் ஐந்தினிலும் மூன்றினிலே தலைதூக்கிக்
காட்டுவதும் எங்கள் குலமே
கடுகளவுதான் சொன்னேன் மலையளவு புகழுண்டு
காண்பாய் நீ தமிழர் நிலமே!
கடலோடி மலைநாடுப் பிறநாடும் சென்றூர்கள் கப்பல்
வராதபோதே
காற்றினிலே பாய்போட்டுக் கடவுளையே துணை வைத்து
கலங்களெலாம் சென்றபோதே
நடமாடும் சிவமாகத் திருநீறும் சந்தனமும் நதிபோலப்
பூசும் உடலே
'நமசிவாயம்' என்று நாள்தோறும் சொல்லுமவர் நயமான
சிவந்த இதழே
தடப்பார்த்து நடைபோடும் தனிப்பண்பு மாருத தகைமிக்க
தெங்கள் குலமே
தந்தகரம் அவராகப் பெற்றவளும் நீதானே சாட்சி சொல்
தமிழர் நிலமே!
ஆருயிரம் பேர்கள் கற்கின்ற கழகத்தை அண்ணமலை
நாட்டினன்
அவனேடு போட்டியிட அத்தனையுர் தான்தந்து அழகப்பன்
முடி சூட்டினன்
ஓராயிரம் தடவை செட்டிமகன் நானென்று உலகெங்கும்
மார்தட்டினன்
உளநூலும் விஞ்ஞான மருத்துவமும் கற்றவர்கள்
உண்டென்றுபேர் காட்டினன்
சேராத செல்வத்தைச் சேர்த்தாலும் நல்லவழி செலவாக்கும்
எங்கள் குலமே
செந்திருவை சரஸ்வதியைக் கேட்டேனும் உண்மை நிலை
தெரிந்துகொள் தமிழர் நிலமே!

சாதிவெறி கொண்டேன் போல் கவிதையினை எழுதினேன்
தவறல்ல; உண்மை சொன்னேன்-
தர்மத்தைப் பாடுவது சாதிவெறியாகாது தமிழுக்கே
நன்மை என்பேன்
ஓதியொரு மொழி சொன்ன ஒக்கூர் மாசாத்தியுமென்
உன்னதப் பாட்டியாவாள்
உயர்ந்த சீத்தலைச் சாத்தன் ஒருவகையில் வணிகனென்
உத்தமப் பாட்டனுவான்
ஆதிமுதல் தமிழிலே அவர் வந்த வழியிலே அடியேனைப்
பெற்ற குலமே
அளவிலே சிறிதேனும் செயலிலே பெரிதாக அறிவாய் நீ
தமிழர் நிலமே!

# கொறட்டிக் கருப்பர்

மஞ்சணத்திக் கருப்பா! மங்கிலியாரி அம்மா
தஞ்சமென வந்துன் தாள்பணிந்து நின்ருேம்
செஞ்சொலினுல் பாடிச் சீர்பரவு கின்ருேம்
அஞ்சலென வந்தே அருள்புரிய வேண்டும்.

— "பொற்கிழிக்கவிஞர்" "காசிஸ்ரீ" அரு. சோமசுந்தரன்

# நகரத்தார் புகழ்

தோத்திரத்தில் ஏழாய்க் கோவிலால் ஒன்பதாய்
நாத்திறத்தால் குருஅருளை நயந்தேற்கும் நகரத்தார்
தோத்திரத்தால், சாத்திரத்தால், தொண்டால் அழியாத
கோத்திரமாம் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள்-
புகழுறச் செய்குருதலம் துலாவூரே.

— ஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகராகிய
ஞானப் பிரகாச தேசிகர், துலாவூர்

# 9 கோவில்கள், பிரிவுகள், புள்ளிகள்

| | | புள்ளிகள் |
|---|---|---|
| 1 | இளையாற்றங்குடி கோவில் (வழி) கீழச்சிவற்பட்டி (கைலாசநாதர்–நித்தியகல்யாணி)<br>பிரிவுகள்:– 1. ஒக்கூருடையார் 2. பட்டினசாமி 3. பெருமருதூருடையார் 4. கழனிவாசல்குடியார் 5. கிங்கினிக்கூருடையார் 6. பேர செந்தூருடையார் 7. சிறுசேத்தூருடையார். | 4,555 |
| 2 | மாத்தூர் கோவில் (வழி) காரைக்குடி (ஐநூற்றீசர்–பெரியநாயகி)<br>பிரிவுகள்:– 1. உறையூர் 2. அரும்பாக்கூர் 3. மணலூர் 4. மண்ணூர் 5. கண்ணூர் 6 கருப்பூர் 7. குளத்தூர். | 4,563 |
| 3 | வைரவன் கோவில் (வழி) திருப்பத்தூர் (வளரொளிநாதர்–வடிவுடையம்மை)<br>பிரிவுகள்:– 1. சிறுகுளத்தூருடையார் (பெரியவகுப்பு, தெய்யனார், பிள்ளையார் வகுப்பு) 2. கழனிவாசல் 3. மருதேந்திரபுரமுடையார். | 4,868 |
| 4 | இரணிக்கோவில் (வழி) கீழச்சிவற்பட்டி (ஆட்கொண்டநாதர்–சிவபுரந்தேவி) | 2,387 |
| 5 | பிள்ளையார்பட்டிக் கோவில் (வழி) திருப்பத்தூர் (விநாயகர்: கற்பக விநாயகர்) (திருவீசர்–சிவகாம வல்லி, மருதீசர்-வாடாமலர் மங்கை) | 2,962 |
| 6 | நேமம் கோவில் (வழி) குன்றக்குடி (ஜெயங்கொண்ட சோழீசர்-சவுந்தரநாயகி) | 1,428 |
| 7 | இலுப்பைக்குடிக் கோவில் (வழி) காரைக்குடி (தான்தோன்றியீசர்-சவுந்தரநாயகி) | 2,407 |
| 8 | சூரக்குடிக்கோவில் (வழி) சொக்கநேந்தல் (தேசிகர்–ஆவுடையநாயகி | 1,130 |
| 9 | வேலங்குடிக் கோவில் (வழி) கோட்டையூர் (சண்டிகேசுவரர்–காமாட்சியம்மை) | 36 |
| | ஆக நகரத்தார் புள்ளிகள் : | 24,316 |

(பிப் 1988-ல் 9 கோவில் பதிவேட்டில் உள்ளபடி)

௨

## இளையாற்றங்குடி
## அருள்மிகு கைலாசநாதர்

எண்ணரிய அறஞ்செய்தோர் வாழும் நாட்டில்
இளையாற்றங் குடிநகரத் தார்கள் கூடிக்
கண்ணெனவே எமைக்காப்பாய் என்று வேண்டும்
கைலாச நாதரிரு திருத்தாள் போற்றி!

## அருள்மிகு நித்யகல்யாணி

வஞ்சியிவள் கைலாச நாத ருக்கு
வாய்த்ததுணை எனவந்த எம்பிராட்டி
நெஞ்சாரப் பணிவார்க்குக் கருணை செய்யும்
நித்யகல் யாணியினை நினைவிற் சேர்ப்பாம்.

## வயிரவன் கோவில்
## அருள்மிகு வளரொளிநாதர்

வயிரவன் கோவில் வாழ்பெருங் கடவுள்
உயர்புனற் கங்கை ஒங்கிய முடியார்
வளரொளி நாதர்தம் வானுயர் திருத்தாள்
களிப்புடன் பணிவோம் கவலைகள் மறப்போம்.

## அருள்மிகு வடிவுடையம்மை

வளரொளி நாதர் இடமமர் கோதை
அளிமுரல் கின்ற அணிமலர்க் கூந்தல்
வடிவுடை அம்மைதாள் வணங்கிப் போற்றிப்
படிமிசை உயர்வோம் பயன்பல பெறுவோம்.

## மாற்றூர்
## அருள்மிகு ஐந்நூற்றீசர்

மாமுனிவர் கொங்கணர்க்கே காட்சி தந்தார்
மாற்றறியாப் பொன்மேனி ஐந்நூற் றீசர்
சேமமுற மாற்றூரில் கோயில் கொண்டார்
சேவடிகள் தலையேற்றுச் சிறந்து வாழ்வோம்.

### அருள்மிகு பெரியநாயகி

பெருமானைப் பிரியாத அன்னை எங்கள்
பேர் பெரியநாயகியாள் ஐந்நூற் றீசர்
கரமான்போல் விழிமானாள் அடிவ ணங்கிக்
கைதொழுவோம் காலமெலாம் இனிது வாழ்வோம்.

## இரணிக் கோவில்

### அருள்மிகு ஆட்கொண்டநாதர்

அழகுபொலி சிற்பஞ்சேர் இரணிக்கோவில்
ஆட்கொண்டநாதரெனும் அன்புத் தெய்வம்
எழில்பொலியும் சடையினிலே பிறையைத் தாங்கும்
எம்பெருமான் திருத்தாள்கள் இதயம் சேர்ப்பாம்

### அருள்மிகு சிவபுரந்தேவி

சேல்மீன்போல் விழிகொண்ட சிவபு ரத்தான்
ஆட்கொண்ட நாதரிடம் சேர்ந்த செல்வி
பால்போலும் மொழியுடையாள் திருப்பா தங்கள்
பணிவாருக் கில்லைபயம் பணிந்து வாழ்வோம்

## பிள்ளையார்பட்டி

### அருள்மிகு மருதீசர்

பேர்பெரிய கற்பகத்துப் பிள்ளை ஆளும்
பிள்ளையார் பட்டியிலே கோவில் கொண்டார்
சீர்பெரிய மருதீசர் செந்தீ ஏந்திச்
சிரித்தாடும் அவரடிகள் சிந்தை சேர்ப்போம்.

### அருள்மிகு வாடாமலர் மங்கை

மருதீசர் உடனாகி வாழும் வாடா
மலர் மங்கை என்றமலர் முகத்தி னாளைக்
கருதியவள் பொற்பாத கமலம் தோய்ந்து
கைகுவிப்போம் பயன்பெறுவோம் போற்றி போற்றி.

நேமம்

## அருள்மிகு செயங் கொண்ட சோழீசர்

பயங்கொண்ட பலரெல்லாம் பணியக் கண்டு
பாவங்கள் பொடியாக்கி வினையை வென்று
செயங் கொண்ட சோழீசர் நேமம் கோவிற்
செழும்பொருளைத் தினந்தோறும் சிந்தை செய்வோம்

## அருள்மிகு சௌந்தர நாயகி

செயங்கொண்ட சோழீசர்க் குகந்த மங்கை
செங்கமல நாயகியாள் சௌந்த ரத்தின்
வயங்குபொன் திருவடிகள் பணிந்து வாழ்வோம்
வாழவழி வகைசெய்வாள் வணங்கி நிற்போம்.

சூரக்குடி

## அருள்மிகு தேசிகநாதர்

சோதிச் கதிர்விடும் சுந்தர மேனித்
தேசிக நாதர் சூரைக் குடியிற்
கோயில் கொண்ட கொன்றைச் சடைமுடி
நாயகன் பாதம் நாளும் போற்றி.

## அருள்மிகு ஆவுடையம்மை

தேசிக நாதர் திருமனைச் செல்வி
அமுதச் செவ்வாய் ஆவுடையம்மை
பொன்னார் சேவடி போற்றிப் பணிவோம்
அன்னை இவளை அனுதினம் துதிப்போம்.

இலுப்பக்குடி

## அருள்மிகு சுயம்பிரகாசேசுவரர்

ஏரார் பொழில்சூழ் இலுப்பக் குடிவாழ்
சுந்தரக் கடவுள் சுயம்பிர காசர்
கங்கைச் சடைமுடிக் கதிர்மதி சூடி
எங்கும் இருப்போன் இவனடி பணிவாம்.

அருள்மிகு சௌந்தரநாயகி

பொன்னிறச் சோதிச் சுயம்பிர காசர்
தன்னிடம் கொண்ட தையல் சௌந்தர
நாயகி இவளது நளினத் தாமரை
அடிகளைப் பணிவோம் அனுதினம் துதிப்போம்.

வேலங்குடி

அருள்மிகு கண்டீசர்

தனவணிகர் வரலாற்றை உரைக்கும் செய்தி
தனக்கிடமாய் வாழ்வேலங்குடிசேர் ஈசன்
கனதனங்கள் தருகின்ற செல்வக் கோமான்
கண்டீசர் திருப்பாதம் நெஞ்சில் வைப்போம்.

அருள்மிகு காமாட்சி

கண்மூன்று கொண்டபிரான் மன்று ளாடி;
கண்டீசர் காதலுக்கே உரிய மாது
பண்மொழியாள் காமாட்சி என்னும் அன்னை
பதமலர்கள் தலைக்கணியாய்ப் பணிந்து வாழ்வாம்.

காப்பியக் கவிஞர் நா. மீனவன் எம் ஏ., பி. எட்.
[கண்டரமாணிக்கம்]

---

மணியே மணியின் ஒளியே ஒளிரும் மணிபுனைந்த
அணியே அணியும் அணிக்கழ கேஅணு காதவர்க்குப்
பிணியே பிணிக்கு மருந்தே அமரர் பெருவிருந்தே
பணியேன் ஒருவரை நின்பத்ம பர்தம் பிணிந்தபின்னே.

அபிராமி அந்தாதி

---

# நகரத்தார் வரலாறு

*கி. மு 2900 முதல் கி. மு. 785 வரை 2115 வருடங்கள்.*

நாகநாட்டில் சந்தியாபுரி நகரில் சந்திரகுலகோத்திர வைசியர் என்று சிவனை வழிபடும் சைவர்களாக வாழ்ந்தனர். சிலகாலத்தில் அவ்வூர் அரசன் கொடுமையால் காஞ்சிபுரம் வந்து இரத்தின வியாபாரம் செய்து மிகவும் மதிப்புடன் வாழ்ந்தனர். பிரதாபராஜன் காலத்தில் அவனது அநீதிகளைப் பொறுக்காமல் சோழதேசம் சென்றனர்.

*கி. மு. 785 முதல் கி. பி 707 வரை 1492 வருடங்கள்.*

மனுநீதிச் சோழன் இவர்களை சகல மரியாதைகளுடன் காவிரிப்பூம்பட்டினத்தில் கிழக்கு, மேற்கு, தெற்குத் தெருக்களில் குடியமர்த்தினான். மன்னருக்கு மகுடம் சூட்டும் மரியாதை பெற்றனர் சிதம்பரம் அகோர சிவாச்சாரியார் என்பவரைத் தமது குல குருவாகக்கொண்டனர்கி. பி. 674-ல் பூவேந்தி சோழராஜன் இவர்கள் செல்வச்சிறப்பில் பொறாமை கொண்டு பல அநீதிகள் இழைத்ததோடு தகாத காரணம் காட்டிப் பெண்டிரைச் சிறைவைக்கத் திட்டமிட்டான். இந்த அவமானம் தாங்காமல் பள்ளி சென்ற ஆண் பிள்ளைகள் தவிர மற்ற ஆண், பெண், குழந்தைகள் அனைவரும் உயிரை மாய்த்துக் கொண்டனர் பள்ளி சென்ற பிள்ளைகள் ஆத்மநாத சாஸ்திரி பொறுப்பில் 9 ஆண்டுகள் வாழ்ந்துவந்த போது கி. பி 683—ல் இளவரசன் ராஜபூஷணனுக்கு முடிசூட்டும் நாள் வந்தது. முடிசூட்டவேண்டிய வைசியர் அனைவரும் பிரம்மச்சாரிகளாய் இருந்ததால் அரசன் அகோர சிவாச்சாரியார் மற்றும் பெரியவர்கள் ஆலோசனைப்படி சைவவேளாளர்களை இவர்களுக்குப் பெண் கொடுக்குமாறு சொன்னான். வைசிய குமாரர்களும் பெண் கொள்ளச்சம்மதம் ஆனால் அதன்பின் எந்தக் கொள்வினை கொடுப்பினை சடங்கு மரியாதைகள் இல்லை என்ற நிபந்தனையில் வேளாளர் பெண்களைத்

திருமணம் செய்து கொண்டு மன்னனுக்கு மகுடம் சூட்டினர். இந்தச் சந்ததிப் பெண்களுக்கு உபதேசம் சொல்லும் உரிமை மட்டும் வேளாளர் குல ஆதினக் குருமார்களுக்குக் கொடுக்கப் பட்டது. அந்த உரிமைப்படிதான் நகரத்தார் பெண்கள் குரு பீடம் துலாவூரில் இன்றும் இயங்கி வருகிறது.

கி பி. 707 முதல்

பாண்டிய நாட்டை ஆண்ட சவுந்தரபாண்டியன் தன் நாட்டில் நற்குடிகளை அமர்த்தத் திட்டமிட்டு சோழ அரசன் சம்மதத்துடன் வைசியர்களை 707-ல் பிலவங்க வருஷம் வைகாசி மாதம் 21உ அழைத்து வந்து ஒங்காரக்குடி (காரைக் குடி)யில் குடியமர்த்தினான். வைசியர்களும் தெற்கே வைகை, வடக்கே வெள்ளாறு, கிழக்கே கடல், மேற்கே பிரான் மலை என எல்லைகள் அமைத்துக் கொண்டு வாழ்ந்தனர். காணி யாள வேளாளர் வகுப்புப் பெண்களை மணந்தவர்கள் சுந்தர பட்டிணத்திலும், கார்காத்த வேளாளர் வகுப்புப் பெண்களை மணந்தவர்கள் அரியலூரிலும், சோழிய வேளாளர் வகுப்புப் பெண்களை மணந்தவர்கள் இளையாற்றங்குடியிலும் வசித் தனர். மூவருக்கும் பொதுவான மரகத விநாயகரை அரியூர் மேலத் தெருவில் வைத்து வழிபட்டனர்,

ஆறுவழி அரியூரார் 1288-ல் அரியூர் எடுபட்டுப்போன பிறகு நாகர்கோவிலில் கோட்டாறு பகுதியில் வசித்து வருகின்றனர்.

ஏழுவழி இளையாற்றங்குடியார் :- நரட்டுக்கோட்டை நகரத்தார் எனப்பெயர் பெற்று காலப்போக்கில் 9 ஆகப் பிரிந்து வாழ விரும்பிப் பாண்டியனிடம் கீழ்க்கண்ட கோவில் களைக் கேட்டுப் பெற்றனர். 707-ல் இளையாற்றங்குடி, 712ல் மாற்றூர், வயிரவன்பட்டி, 714-ல் இரணியூர், பிள்ளையார் பட்டி, நேமம், இலுப்பைக்குடி, 718-ல் சூரைக்குடி, வேலங்குடி இந்த 9 இடங்களில் வாழ்ந்தவர்கள் 96 ஊர்களில் குடி யேறினர். இப்போது 75 ஊர்களில் வசித்து வருகின்றனர்.

# சிவாலய வழிபாட்டு முறை

1) மலர்கள், தேங்காய், பழம், சூடம், சாம்பிராணி, ஊதுபத்தி, தீபம் இட எண்ணெய், நெய் இவைகள் எவையேனும் கொண்டுபோக வேண்டும்.

2) வணங்கும்போது 'ஓம் நமச்சிவாய' எனும் திருமந்திரம் சொல்ல வேண்டும்.

3) தலைவிநாயகரை தரிசிக்க வேண்டும். தலையில் குட்டிக் கொண்டு தோப்புக்கரணம் போட வேண்டும்.

4) கொடிமரம், பலிபீடம், நந்தி இவைகளை வணங்கிய பின் துவாரபாலகரின் உத்திரவு பெற்று இறைவன் சந்நிதி அடைய வேண்டும்.

5) மூல மூர்த்தியை வணங்கியபின் சந்திரசேகர், நடராசர், சிவகாமி அம்மை, சோமாஸ்கந்தர் (பிரதோஷ சுவாமி, அம்மன்) முதலிய உற்சவ மூர்த்திகளை வணங்க வேண்டும்.

6) அம்பிகை சன்னதியடைந்து தேவியை வழிபடவேண்டும்.

7) பின்னர் பிரகாரத்தில் உள்ள நாயன்மார், தெட்சிண மூர்த்தி, மகாலெட்சுமி, முருகன், துர்க்கை, நவக்கிரகம் முதலியோரை வழிபட வேண்டும்.

8) இறைவன், தேவி இவர்களின் கோயில்களை குறைந்தது மும்முறையாவது வலம் வர வேண்டும்.

9) கடைசியாக கொடிமரத்துக்கு அருகில் வந்து பூமியில் விழுந்து வணங்கிய பின் சற்று தூரத்தில் அமர்ந்து ஐந்தெழுத்தை 108 முறைக்கு குறையாமல் ஓதியபின் இறைவனிடம் விடைபெற்று, கோயிலைவிட்டு வர வேண்டும்.

# அபிஷேகப்பிரிய : சிவ :

## அபிஷேகத்திஞல் உண்டாகும் பயன்

| | | |
|---|---|---|
| 1. | நல்லெண்ணே | — சுகம் |
| 2. | மாப்பொடி | — கடன் நீக்கம் |
| 3. | மஞ்சள் பொடி | — வசீகரம் |
| 4. | நெல்லிமுள்ளி | — வியாதி நிவர்த்தி |
| 5. | சர்க்கரை | — பகைவன் நீக்கம் |
| 6. | பஞ்சாமிருதம் | — வலிமை |
| 7. | பால் | — ஆயுள் விருத்தி |
| 8. | தயிர் | — புத்திரப்பேறு |
| 9. | நெய் | — அறிவு |
| 10. | தேன் | — இராகவிருத்தி |
| 11. | கருப்பஞ்சாறு | — வாக்குவன்மை |
| 12. | எலுமிச்சம் பழம் | — சத்ருநாசம் |
| 13. | நாரத்தை | — நேர்வழியாக செல்லுதல் |
| 14. | இளநீர் | — சமசீதோசணம் |
| 15. | சந்தனம் | — இலட்சுமிகடாட்சம் |
| 16. | பன்னீர் | — எல்லாவிதமான நன்மை அமைதி |

❋

# இசைவுப் பிடிமானம்

——————ஞூ ————— மீ ————— உ ———— —— (கோவில்) ——————(பிரிவு) —— (தந்தை பெயர்)————. செட்டி (பெயர் ஓகாரத்துடன்) ———————————— (கோவில்) —————————(பிரிவு) (தந்தை பெயர்) ——————செட்டி —————————(பெயர் ஓகாரத்துடன்).

இவர் மகன் ———————— க்கு இவர் மகள் ————————— ஐப் பாணிக்கிரகணம் பண்ணிக் கொண்டமைக்கு இவர் பூஷணம் பூட்டும் பொன் ஒன்பது ஆறு கல்லெடை, பொன் பதின் முக்கழஞ்சு, இவர் சீதனம் கொடுக்கும் பொன் இம்மாறு இவ்வெடை, பொன் ஆறுகழஞ்சு, வெள்ளி ஆறு கழஞ்சு, வெண்கலத் தராப்பலம், அறுபத்தொன்று, வெள்ளாட்டிப் பணம் முப்பதும், சீராட்டுச் சக்கரம் அறுபத்தொன்று, இவ் வகைப்படி செய்வோம் இவர் நன்கொடை கொடுக்கும் பொன் ஐம்பது, மோதிரம் விராகனிடை மூன்று, இவர் உகந் துடைமையாய்க் கொடுக்கும் பொன் வளையல் ஏழு கழஞ்சு இவ்வகைப்படி செய்வோம். இந்தநாள் இவரிடும் பொன் இவர் சொற்படி தெரிசனை பதின்முக்கழஞ்சு, இவ்வகைப்படி செய்வோம். இந்த இசைவு பிடிமானம் எழுதினேன் ———— (கோவில்) ——————————(பிரிவு) —————(தந்தை பெயர்) ——————செட்டி (எழுதியவர் பெயர்)

கையெழுத்து ———————————

கையெழுத்து ———————————

---

| | | |
|---|---|---|
| பி. கு : | பொன் ஒன்பது | : ஒன்பது மாற்றுள்ள பொன் |
| | கழஞ்சு | : 1/6 அவுன்ஸ் |
| | இம்மாறு | : இவ்விதம் |
| | தராப்பலம் | : செம்பு, ஈயம், 8 : 5 உலோகம் |
| | வெள்ளாட்டிப் பணம் | : ஸ்ரீதனப் பணம் |

எண்ணிய முடிதல் வேண்டும் நல்லவே எண்ணல் வேண்டும்
திண்ணிய நெஞ்சம் வேண்டும் தெளிந்த நல்லறிவு வேண்டும்
பண்ணிய பாவம் எல்லாம் பரிதிமுன் பனியே போல
நண்ணிய நின்முன் இங்கு நசித்திடல் வேண்டும் அன்னாய்.

— மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

## இலக்குமி வணக்கம்

காடு வெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
வீடுகட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் — வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள் அம்மா! இலக்குமியே!
என்றைக்கும் நீங்கா திரு!

நின்மேலுமாணை நின்மகன் மேலுமாணை நின்மாக் கொழுநன்
தன் மேலுமாணை தண்கடன் மேலுமாணை தனமாவணிகச்
சின்னஞ்சிறுவர் தெரியாத காளையர் என் செய்யினும் நீ
பின்னும் பொறுத்தே இருப்பாய் சிறப்பாய் பெரிய இலக்குமியே!

— பாடுவார் முத்தப்ப செட்டியார்

## மீனாட்சி அம்மை வாழ்த்து

செழியர் பிரான் திருமகளாய்க் கலை பயின்று,
முடிபுனைந்து, செங்கோல் ஓச்சி,
முழுதுலகும் சயங்கொண்டு, திறை கொண்டு,
நந்தி கணமுனைப் போர் சாய்த்து,
தொழுகணவர்க்கு அணிமணமா லிகைசூட்டி,
தன் மகுடம் சூட்டி, செல்வம்
தழைவுறுதன் அரசளித்த பெண்ணரசி
அடிக்கமலம் தலைமேல் வைப்பாம்.

— பரஞ்சோதி முனிவர்



நான் இருக்கும் இடமெல்லாம் சகல
சௌபாக்கியங்களும் தந்து காத்தருள்வேன்

வள்ளுவர் அச்சகம், காரைக்குடி.